ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுனயே நம:

# வைஷ்ணவ அனுஷ்டான விதி

ஸ்ரீ கோவிந்தராஜர் - திருச்சித்ரகூடம்

பதிப்பாசிரியர்

**தி.ந.ச. பாஷ்யகார**

தில்லை திருசித்திரக்கூட (சி



Tca Venkatesan
236 Bellshire Ln
Rochester Hills, MI 48307

ஸ்ரீ மதே ராமானுஜாய நம:　　ஸ்ரீ:　　ஸ்ரீமத் வரவரமுனயே நம:



# ஸ்ரீ வைஷ்ணவ அனுஷ்டான விதி


தொகுப்பு:
ஆசிரியர்
அஷ்ட கோத்திரம்
**தி.ந.ச.பா பாஷியம் அய்யங்கார்**
தில்லை திருசித்ரகூடம்

*First Edition :* ***Sept. 2002***
*1000 Copies*

*Second Edition :* ***March 2005***
*1000 Copies*



**சமர்ப்பணம்**

அடியேன் ஆச்சாரியார் அடியேன் திருதகப்பனார் ஆன தில்லை திருசித்திரகூடம் திருமலை நல்லான் சக்கரவர்த்தி ஸ்ரீஉ.வே.பார்த்தசாதி ராமானுஜாச்சாரியார் ஸ்வாமி அடியேன் திருத்தாயார் ஸ்ரீமதி ருக்குமணி அம்மாள் திருவடித்தாமரைகளில் இந்த ஸ்ரீ கோசத்தை சமர்ப்பிக்கின்றேன்.

*Price* ***Rs.15.00***

Printed at
**RNR Printers & Publishers**
19, Thandavarayan Street,
Triplicane, Chennai - 600 005.
Phone : 2844 1856

ஸ்ரீ:

# அடியேன் செய்யும் விண்ணப்பம்

நம் வைணவ நித்திய கர்மானுஷ்டான கிரமங்களை ஓர் ஸ்ரீ கோசம் ஆக வெளியிட்டு நம் வைணவ குலத்தில் உள்ளவர்கள் அனைவரும் எம்பெருமானின் கிருபாகடாச்சத்தை அடையவும், சிரேஷ்டர்களாக இருக்கவும் இந்த ஸ்ரீகோசத்தை வெளியிடுகின்றேன். மேற்படி பல நல்ல விஷயங்களை தொடர்ந்து வெளியிடவும் எம்பெருமானின் கிருபாகடாச்சத்தை அடைய பல மகனீயர்கள் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து இந்த மாபெரும் வேள்விக்கு பல விதமான உதவிகளையும் அளித்து உள்ளனர். அவர்கள் அனைவருக்கும் என் கிரதக்ஞையை தெரிவித்துக் கொள்கின்றேன்.

என் வழிகாட்டியாகவும் தலைசிறந்த குருவாகவும் இருந்த வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமிக்கும் அடியேன் லோகாசாரியன் ஆன வைகுண்டவாஸியும் அடியேனை திருத்தி பணி கொண்ட அஷ்ட கோத்திரம் பெரிய ஸ்வாமி அ. வெங்கடாச்சாரியார் ஸ்வாமியும் அவரின் பாரியை ராஜலட்சுமி அம்மங்கார், அடியேன் தகப்பனாரும் ஆசாரியனுமான அஷ்டகோத்திரம், திருமலை நல்லான் சக்கிரவர்த்தி பார்த்தசாரதி ராமானுஜாச்சாரியார், அவர் பார்யை அடியேன் திருத்தாயார் ருக்குமணி அம்மங்கார், அடியேனுக்கு அருளிச் செயலில் ருசி ஏற்படுத்திய ஆசாரியர் ஸ்ரீ.உவே சுந்தராச்சாரியார் ஸ்வாமி முதலானவர்களுக்கும் அடியேன் கிரதக்ஞையை தெரிவித்துக் கொள்கிறேன். மேற்படி அனைவரின் திருப்பாத கமலங்களில் நான் வழிபடுகின்றேன். இந்த ஸ்ரீகோசத்திற்கு முன்னுரை வழங்கிய ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமிக்கும் அடியனே் கிரதக்ஞையை தெரிவித்துக் கொள்கின்றேன். முன்னுரை வழங்கியும் இந்த ஸ்ரீகோசத்திற்கு வேண்டிய உதவிகள் பல செய்தும் அச்சுப்பிழை திருத்தியும் அடியேனை திருத்திப்பணி கொண்ட ஸ்ரீ வைஷ்ணவச் செம்மல் அஷ்ட கோத்திரம் ஸ்ரீ உவே Dr. A.V. ரங்காச்சாரியார் ஸ்வாமிக்கு அடியேன் கிரதக்ஞையை தெரிவித்துக் கொள்கின்றேன். இந்த ஸ்ரீ கோசம் வெளிவர உதவிய என் ஆத்ம நண்பரும் சதா எந்த காலங்களிலும் நமது ப்ரமாச்சாரியர்களான ஸ்ரீமன் நாத முனிகளையும் ஸ்ரீ ஆளவந்தர் ஸ்வாமியையும் நினைத்து வாழ்ந்து கொண்டு இருக்கும் அஷ்டகோத்திரம் ஸ்ரீ.உவே. S. ராஜ கோபாலன் ஸ்வாமிக்கு மேற்கொண்டு பல சத்சம்பிரதாய விஷயங்களை வெளியில் கொண்டு வர அவரை ஞாபகபடுத்தியும் என் கிருதக்ஞையை தெரிவித்துக் கொள்கின்றேன்.

வருகின்ற திவ்யதேசங்கள் பலவற்றுக்கு கூட முழுக்கு நடத்தியும் பல ஸன்னதிக்கு திருப்பணிகளை செய்து வரும் திருப்பணித் திலகம் ஸ்ரீ.உ.வே. திரு கோஷ்டியூர் மாதவன் ஸ்வாமிக்கும் என் கிருதக்ஞையையும் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்த ஸ்ரீ கோசம் வெளிவர பிரண்ட் செய்தும் கிராபிக் ஒர்க்ஸ் செய்து உதவிய ஸ்ரீ.உ.வே ராஜன் ஸ்வாமி, ஸ்ரீ.உ.வே கிருஷ்ணன் ஸ்வாமி, ஸ்ரீ.உ.வே பிரபு ஸ்வாமியும், மற்றும் R.N.R பிரிண்டர்ஸ் அனைவருக்கும் என் கிரதக்ஞையை தெரிவித்துக் கொள்கின்றேன்.

வாசக தோஷம் க்ஷமித்தருள வேணும்.

**தாஸன்**

அஷ்டகோத்திரம் தி.ந.ச. பா. பாஷியம்

தில்லைத் திருச்சித்ரகூடம்.

ஸ்ரீ:



# ஸ்ரீ வேங்கடார்ய குருகுலம்

## அருள்மாரி அருளிச்செயல் ஆய்வகம்

Dr. A.V. ரங்காசாரி

151, மேல வீதி
சிதம்பரம் - 608 001

---

ஸ்ரீ வைஷ்ணவ ஜன்மமே உலகில் மிகச் சிறந்தது. இவ் வைஷ்ணவ ஜன்மத்தில் பிறந்த ஒவ்வொருவருக்கும் நித்ய அனுஷ்டானம் மிகவும் முக்கியமானது. "ஆசார: ப்ரபவோ தர்ம:" என்றபடி.

ஸ்ரீ வைஷ்ணவ அனுஷ்டானம் மிகவும் எளியது என்ற நிலையை அறிவித்து, அதன்படி அனைவரும் அனுஷ்டிக்கும்படி, அனுஷ்டான க்ரமங்களை மிக எளிமையாக்கி இந்நூலை சித்ரகூடம் அஷ்டகோத்ரம் திருமலை நல்லான் சக்ரவர்த்தி பாஷ்யகாசார்ய ஸ்வாமி வெளியிட்டுள்ளார். இந்நூலை அனைவரும் பெற்று, அதன்படி நல்ல பதத்தால் மனை வாழ்ந்து இன்புறுவதே இந்நூலாசிரியருக்கு நாம் செய்யும் நன்றிக்கடனாகும்.

ஸ்ரீ வைஷ்ணவ அனுஷ்டானத்தை விளக்கும் இதுபோன்ற பல எளிய நூல்களை இந்நூலாசிரியர் வெளியிட்டு, வைணவத்தை மேலும் மேலும் தழைக்கச் செய்ய வேண்டுகிறேன்.

**அ.வே. ரங்காச்சாரி**

---

E-mail : ld-avr Chari@yahoo.com
Telephone : 04144 20425

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ அநுஷ்டான விதி

## 1. நித்திரையிலிருந்து விழித்தல்

சூரியன் உதிப்பதற்கு முன் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும் போது ஆசாரியரின் திருவடிகளை த்யானித்துக் கொண்டு, அவருடைய தனியனை த்யானித்துக் கொண்டும், கூப்பிய கரங்களாக நடந்து சென்று, வாய் கொப்பளித்து கை, கால்களையும், கண்களையும் அலம்பிக் கொள்ள வேண்டும்.

பின்பு "ஓம் ஸ்ரீ ஹரி" என்ற, மந்திரத்தை ஏழு தடவை சொல்லிக் கொண்டு, பகவத் சந்நிதியில் தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

கிழக்கு (அ) வடக்கு முகமாகவோ உட்கார்ந்து கொண்டு, "ஆசாரியன் தனியன்" முன்னாக "வாக்ய குருபரம்பரையும்" த்வயமும், அநுசந்தித்துக் கொண்டு, பின்பு எழுந்து வலது காலை முன்னதாக எடுத்து வைத்து, ஸ்ரீரங்க யாத்திரை செல்வதாக நினைத்துக் கொண்டு.

குஷ்யதே யஸ்ய நகரே
ரங்க யாத்ரா திநே, திநே,
தமஹம் சிரஸா வந்தே
ராஜாநம் குலசேகரம்

இந்த ஸ்லோகத்தை அநுசந்தித்துக்கொண்டு, இரண்டொரு அடியிட்டுக் கொண்டே, ஸ்ரீரங்க திசை நோக்கி நடத்தல் வேண்டும்.

## 2. ஜல மல விசர்ஜனம்

ஜல, மலம் கழிக்கச் செல்லும் முன், தலையையும், காதுகளையும் வஸ்திரத்தால் சுற்றி கட்டிக் கொள்ள வேண்டும். மூன்று தரம் கையைத்

தட்டவேண்டும். பகலில் வடக்கு முகமாய் இருக்க வேண்டும். மாலையில் தெற்கு முகமாய் இருந்து கொண்டு கழிக்க வேண்டும்.

பின்பு, மண்ணும் ஜலமும் கொண்டு, இடக் கையில் மண்ணை எடுத்துக்கொண்டு, குறியை ஒரு தடவையும், குதத்தை ஆறு தடவைக்குக் குறையாமலும், சுத்தம் செய்யவேண்டும். அதன்பின், இரண்டு கைகளையும் சேர்த்து மண்ணால் ஏழு தரம் கழுவ வேண்டும். அடுத்தபடியாக, கால்களையும் மூன்று தடவை முன் போலவே சுத்தம் செய்யவேண்டும்.

அந்த இடத்தை விட்டு நகர்ந்து வந்து, வாய், கை, கால்கள் கண்கள் ஆகியவற்றைக் அலம்பி, 12 தடவை வாயில் ஜலம் சேர்த்து கொப்பளித்து இடதுபுறமாகத் துப்பவேண்டும். தலையில் சுற்றிய வஸ்திரத்தை அவிழ்த்து விடவேண்டும்.

வலது கையில் உளுந்து அமுழ்ந்தும் அளவுக்கு ஜலத்தை உள்ளங்கையில் கொண்டு

ஓம் அச்சுதாய நம :<br>ஓம் அநந்தாய நம :<br>ஓம் கோவிந்தாய நம :

என்று உச்சரித்து மூன்று தரம் உட்கொள்ள வேண்டும்.

## 3. பல் துலக்குதல்

பல் துலக்கும்போது நின்று கொண்டோ, நடந்து கொண்டோ, துணியால் போர்த்திக் கொண்டோ துலக்கக் கூடாது. வடக்கு முகமாக, பல்துலக்க வேண்டும். பற்களை உட்புறமும் வெளிப் புறமும் செவ்வையாகத் துலக்க வேண்டும். நாக்கை வழிக்க வேண்டும்.

ஜலத்தை வாயில் சேர்த்து 14 தரம் செவ்வையாய்க் கொப்பளித்து இடதுபுறத்தில் துப்ப வேண்டும்.

கைகளையும், கால்களையும் முகத்தையும் கழுவிக்கொண்டு, முன்பு போல உள்ளங்கையில் ஜலம் கொண்டு ஓம் அச்சுதாய நம: ஓம் அநந்தாய நம: ஓம் கோவிந்தாய நம: என்று சொல்லி உட்கொள்ள வேண்டும்.

## 4. ஸ்நானம் செய்தல்

கிழக்கு முகமாகவே, வடக்கு முகமாகவோ, நின்று கொண்டு ஸ்நான செய்யவேண்டும். இடுப்பில் வஸ்திரத்துடன் ஸ்நானம்செய்ய வேண்டு ஸ்நானம் செய்யும் தீர்த்தத்தை கொஞ்சம் கையில் எடுத்துக் கொண்டு.

"ஸ்ரீமத் பகவத் பாகவத ஆசாரிய ஸ்ரீபாத தீர்த்தம்" என்று அநுசந்தித்த சிரத்தில் புரோட்சித்துக் கொள்ள வேண்டும்.

"ஸ்ரீமத் பகவத் பாகவத ஆசாரிய ஸம்ஸ்லேஷத்துக்கு உறுப்பாக உடம்பை அலம்புகிறேன்." என்று அநுசந்தித்துக் கொண்டே ஸ்நானம் செய்ய வேண்டும். தீர்த்தம் ஆடியபின் கொஞ்சம் தீர்த்தத்தை எடுத்து திருமண் குழைத்துள்ளதாகவும், ஸ்ரீசூர்ணம் குழைத்துள்ளதாகவும் பாவனைப் பண்ணி தீர்த்தத்தால் திருமண் அணிந்து கொள்ளவேண்டும். பின்பு உலர்ந்த ஆடைகளை உடுத்திக் கொள்ள வேண்டும்.

## 5. திருமண் காப்பு அணிதல்

கையில் கொஞ்சம் தீர்த்தத்தை எடுத்து "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று சொல்லி இடத்தை சுத்தம் செய்ய வேண்டும்.

அந்த இடத்தில் திருமண் பெட்டியை உயர்ந்த ஆஸனத்தில் எழுந்தருளப்பண்ணி, தான் தாழ்ந்த சுத்தமான ஆஸனத்தில் கிழக்கு முகமாகவோ வடக்குமுகமாகவே உட்கார வேண்டும்.

ஆசாரியரை த்யானித்துக் கொண்டு, மூன்று தரம் கையைத் தட்டி திருமண் பெட்டியை அவிழ்த்தல் வேண்டும். அதில் உள்ள சிறிய பாத்திரத்தில (தேங்காய் ஓட்டினால் பசுவின் காதுபோல் அமைந்த பாத்திரம்) சுத்தமான தீர்த்தத்தை ஊற்றி, அதில் திருத்துழாயைச் சேர்த்து, "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று வலது கையால் தீர்த்தத்தை மூடி சொல்ல வேண்டும்.

வெள்ளை திருமண் கதிரை வலக்கையால் எடுத்து இடது உள்ளங்கயில் வைத்து, வலது உள்ளங்கையை அதற்கு மேலே வைத்த மூடிக்கொண்டு. "ஸ்ரீ பூதேவ்யை நம:" என்று அபிமந்திரித்து கையை பிரித்து திருமண் கதிரை பெட்டிக்குள் சேர்த்துவிட வேண்டும்.

வலதுகை ஆள் காட்டி விரலால் சிறிய பாத்திரத்தில் உள்ள தீர்த்தத்தை தொட்டு எடுத்து, இடது உள்ளங்கையில் சேர்த்து, திருமண் கதிரால் குழைக்க வேண்டும்.

ஆசாரிய த்யானத்துடன் மூக்கின்மேல் தாமரை மலர் போல் மேல் நோக்கி இழுக்க வேண்டும். (கீழ் நோக்கியும் இழுக்கிறார்கள் அவ்வாறு செய்யகூடாது).

தாமரை மலரை ஒட்டியபடி புருவங்களுக்கு இடையில் கோடு இட்டு, அதன் மேல் வலப்பக்கமும் இடப்பக்கமாக திருமண் அணியவேண்டும். இதுவே நெற்றியில் இடும் முதல் திருமண் ஆகும்.

அதன்பின் சிரசைத் தவிர்ந்த மற்றை 11 இடங்களில் நான்கு பக்கமும் சமமான அளவில் (அ) சதுர வடிவில்* 'ப' வடிவத்தில் திருமண் அமையவேண்டும்.

2-வது திருமண், நாபிக்கு மேலேயும், (அ) நடு வயிறு, 3-வது திருமண், மார்பிலும், 4-வது திருமண் கழுத்தின் முன்புறத்திலும், 5-வது திருமண் வலது வயிற்றிலும், 6-வது திருமண், வலது புஜத்தின் மேல் பாகமும், 7-வது திருமண், கழுத்துக்கு கீழே வலது தோளிலும், 8-வது திருமண், இடது வயிற்றிலும், 9-வது திருமண், இடதுபுஜத்தின் மேல் பாகத்திலும், 10-வது திருமண், கழுத்துக்கு கீழே இடது தோளிலும், 11-வது திருமண், அடிமுதுகிலும், 12-வது திருமண், பிடரிலும் அணியவேண்டும்.

கையிலுள்ள எஞ்சிய திருமணை தீர்த்தத்தில் கழுவிடக்கூடாது. அதை அனைத்தையும் சிந்தாமல் தலையின்மேல் தடவிக்கொள்ள வேண்டும்.

அதன் பின் ஸ்ரீசூர்ணத்தை குழைத்து தீபச் சுடரைப்போல் 12 இடங்களில் மேலே சொன்ன க்ரமத்தில் அணிய வேண்டும். எஞ்சிய ஸ்ரீசூர்ணத்தை தலையில் தடவிக் கொள்ள வேண்டும்.

12 திருமண் காப்பு அணிய அவகாசம் இல்லாதவர்கள், முதலும், கடைசியுமான, நெற்றிலும், பிடரியிலும் அணிந்தால் போதுமானது. பிடரியில் அணியும் போது 'ப' வடிவத்திலதான் அணிய வேண்டும். (பிடரியில் திருமண்ணை மேலும் கீழும் இழுக்காமல் மேல் நோக்கி இழுக்க வேண்டும்.)

## 6. திருப்பவித்ர மாலைகள் அணிதல்

நூற்றெட்டுத் திருப்பதிகள் நினைவாக 108 திருத்துழாய்மணிகள் கொண்ட மாலையை அணிய வேண்டும். 74 ஸிம்மாஸநாதிபதிகளின் பாவனையாக 74 தாமரைமணிகள் உள்ள தாமரை மணியையும் அணிய வேண்டும். திருமந்திரங்களைச் சொல்லும் போது அக்ஷரலோபம் ஏற்பட்டால் அதை பவித்ரமாகச் செய்யும், பவித்ரமாலை (பட்டு நூலினால் செய்ததை) அணிந்து கொள்ள வேண்டும்.

தன்னாசாரியார் திருவடி நிலைகள் தந்திருந்தால் அதை சிரசில் வைத்துக் கொண்டு, அஞ்சலி கைகளோடு, ஆசாரியரை த்யானித்துக் கொண்டு. அவர் தனியனை அநுசந்தித்துக் கொண்டு, அவர் ப்ரசாதித்த திருமந்திரங்களை அநுசந்தித்தல்.

## 7. மந்திரங்கள் அநுசந்தானம் செய்தல்

கூப்பிய கரங்களுடன் கீழே உள்ள மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு, 12 இடங்களிலும் அஞ்சலி செலுத்த வேண்டும்.

| திருமேனியில் அணிய வேண்டிய இடங்கள் | திருமண்ணுக்குரிய மந்த்ரம் | ஸ்ரீ சூர்ணத்துக்குரிய மந்த்ரம் |
|---|---|---|
| 1) நெற்றி | ஓம் கேசவாய நம: | ஓம் ஸ்ரீதேவ்யை நம: |
| 2) நாபிக்குமேல் | ஓம் நாராயணாய நம: | ஓம் அம்ருதோத் பவாயை நம: |
| 3) மார்பு | ஓம் மாதவாய நம: | ஓம் கமலாயை நம: |
| 4) கழுத்தின் முன் புறம் | ஓம் கோவிந்தாய நம: | ஓம் ஸேவ்யை நம: |
| 5) வலது வயிறு புறம் | ஓம் விஷ்ணவே நம: | ஓம் விஷ்ணு பத்னியை நம: |
| 6) வலது புஜம் | ஓம் மதுசூதனாய நம: | ஓம் வைஷ்ணவ்யை நம: |
| 7) வலதுதோள் (கழுத்துக்குகீழ்) | ஓம் த்ரிவிக்ரமாய நம: | ஓம் வராரோஹிண்யை நம: |

| | | |
|---|---|---|
| 8) இடதுவயிறு புறம் | ஓம் வாமனாய நம: | ஓம் ஹரி வல்லபாயை நம: |
| 9) இடது புஜம் | ஓம் ஸ்ரீதராய நம: | ஓம் ஸார்ங்கிண்யை நம: |
| 10) இடதுதோள் (கழுத்துக்குகீழ்) | ஓம் ஹ்ருஷீகேசாய நம: | ஓம் ஸ்ரீதேவதேவ்யை ந ம: |
| 11) அடிமுதுகு புறம் | ஓம் பத்ம நாபாய நம: | ஓம் ஸ்ரீமகாலஷ்மியை நம: |
| 12) பிடரி | ஓம்தாமோதராய நம: | ஓம் ஸர்வாங்க ஸுந்தர்யை நம: |

கூப்பிய கரத்தை மார்புக்கு நேராக வைத்துக் கொண்டு கீழே உள்ள மந்திரங்களை அநுசந்திக்கவும்.

## வாக்கிய குருபரம்பரை

1. ஓம் அஸ்மத குருப்யோ நம:
2. ஓம் அஸ்மத் பரம குருப்யோ நம:
3. ஓம் அஸ்மத் ஸர்வ குருப்யோ நம:
4. ஓம் ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:
5. ஓம் ஸ்ரீ பராங்குச தாசாய நம:
6. ஓம் ஸ்ரீமத் யாமுந முநயே நம:
7. ஓம் ஸ்ரீ ராமமிச்ராய நம:
8. ஓம் ஸ்ரீ புண்டரீகாட்சாய நம:
9. ஓம் ஸ்ரீமந் நாதமுநயே நம:
10. ஓம் ஸ்ரீமதே சடகோபாய நம:
11. ஓம் ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:
12. ஓம் ஸ்ரீயை நம:
13. ஓம் ஸ்ரீதராய நம:

### சுலோக குருபரம்பரை

ஓம் அஸ்மத் தேசிகம், அஸ்மதீய,
பரமாசார்யான், அசேஷான் குருந்,
ஸ்ரீமந் லஷ்மணயோகி புங்கவ,
மஹாபூர்ணௌ, முநிம் யாமுநம்,
ராமம், பத்மவிலோசனம்,
முநிவரம் நாதம், சட த்வேஷிணம்,
ஸேநேசம், ச்ரியம் இந்திரா ஸஹசரம்,
நாராயணம் ஸம்ஸ்ரயே.

### "திருமந்திரம்"

## ஓம் நமோ நாராயணாய

### 'த்வயம்'

ஓம் ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:

### "ஸ்ரீக்ருஷ்ண சரம சுலோகம்"

ஓம் ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாம் ஏகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷ யிஷ்யாமி மாசுச:

### ஸ்ரீராம சரம சுலோகம்

ஓம் ஸக்ருதேவ ப்ரபந்நாய
தாவாஸ்மீதி ச யாசதே
அபயம் ஸர்வ பூதேப்யோ
ததாமி ஏதத் வ்ரதம் மம

### ஸ்ரீவராக சரம சுலோகம்

ஓம் ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே
சரீரே ஸதியோ நர:
தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா
விஸ்வ ரூபஞ்ச மாமஜம்
ததஸ்தம் ம்ரிய மாணந்த்து
காஷ்ட பாஷாண ஸந்நிபம்

அஹம் ஸ்மராமி மத்பக்தம்
நயாமி பரமாங் கதிம்

1 தன் ஆசாரியர் தனியன், 2 அவருக்கு முன்னிருந்த ஆசாரியர் தனியன், 3 அவருக்கு முன்னிருந்த ஆசாரியர் தனியன்கள், வாழித் திருநாமங்களை அநுசந்தித்துக் கொள்ள வேண்டும். பின்பு திருமண் பெட்டியை மூடி பத்திரமாக எடுத்து வைத்து விடவேண்டும்.

## 8 திருத்துழாய் எடுத்தல்

ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை, அஷ்டமி திதி, துவாதசிதிதி, சதுர்த்தசிதிதி, சங்க்ராந்தி, யுகாதி, பருவ சந்தி, முதலிய தினங்களில் திருத்துழாய் எடுக்கக் கூடாது. ஏனைய தினங்களில் எடுத்து வைத்துள்ள திருத்துழாய் சமர்ப்பிக்கலாம்.

திருத்துழாய் வனத்திற்குச்சென்று, பயபக்தியோடு, திருத்துழா யாழ்வானுக்கு அஞ்சலி செய்து, அருளிச் செயலை அநுசந்தித்துக் கொண்டே, நகம்படாமல், நான்கு இதழோடு கூடிய திருத்துழாய்க் கொழுந்து எடுக்க வேண்டும். ஒவ்வொரு இலையாகப் பறிக்கக் கூடாது. சுத்தமான இடத்தில் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

## 9 திருவாராதன க்ரமம்

ஆசாரியன் தனியனை அநுசந்தித்துக் கொண்டு கோயில் ஆழ்வார் முன் தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

சண்ட ப்ரசண்டௌ ப்ராக் த்வாரே
யாம்னே பத்ர ஸுபத்ருகௌ
வாருண்யே ஜய விஜயௌ
ஸௌம்யே தாத்ரு விதாத்ருகௌ
குமுத குமுதாக்ஷச்ச புண்டரீகச்ச
வாமன: ஸங்க கர்ண ஸர்பநேத்ர
ஸுமுகஸ்த ஸு ப்ரதிஷ்டித:

என்று சொல்லி அஷ்டதிக்கும் காவலர்களை எழுந்தருளப் பண்ணுதல்.

## அவர்கள் அநுமதி கொண்டு

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித் தோன்றும் தோரண
வாசல் காப்பானே! மணிக் கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு. அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்.
வாயால் முன்ன முன்னம் மாற்றாதே யம்மா. நீ
நேச நிலைக் கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

- திருப்பாவை. 16

இப்பாசுரத்தை அநுசந்தித்துக் கொண்டு, மூன்று தடவை கையைத் தட்டி விட்டு, கோயில் காப்பவர்களின் அநுமதியோடு கதவை திறக்க வேண்டும்.

## திருப்பள்ளி எழுச்சியுடன் துயில் எழுப்புதல்

கௌஸல்யா ஸுப்ரஜா ராம
பூர்வா ஸந்த்யா ப்ரவர் த்ததே
உ த்திஷ்ட நரசார்தூல
கர்த்தவ்யம் தைவ மாஹ்நிகம்

(வால்மீகி ராமாயணம்)

கதிரவன் குண திசைச் சிகரம் வந்து அணைந்தான்
கனை இருள் அகன்றது காலையம் பொழுதாய்.
மது விரிந்து ஒழுகின மாமலர் எல்லாம்.
வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி
எதிர் திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங் களிற்று ஈட்டமும் பிடியோடு முரசம்
அதிர்தலில் அலை கடல் போன்று உளது எங்கும்
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே.

திருப்பள்ளியெழுச்சி-1.

## "பெருமாள் எழுந்தருளி வீற்றிருக்கும்படி ப்ரார்த்தித்தல்."

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க வெப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்

போ தருமா போலே நீ பூவைப் பூவண்ணா உன்
கோயில் நின்றும் இங்ஙனே போந்து அருளி கோப்புடைய
சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம் பாவாய்
திருப்பாவை-23

"திவ்ய ஸிம்ஹஸநத்தில் எழுந்தருள" என்று திருத்
துழாய் சமர்பித்து, பின்பு மங்களா சாசனம் செய்ய வேண்டும்.

அன்று இவ் உலகம் அளந்தாய் அடி போற்றி
சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி
குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி
வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி
என்று என்று உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கு ஏலோர் எம் பாவாய்
திருப்பாவை-24

"கற்பூராத்தி செய்தல்"

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா, உன்
சேவடி செவ்வி திருக்காப்பு
அடியோமோடும் நின்னோடும்
பிரி வின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வல மார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்து உறையும்
சுடர் ஆழியும் பல்லாண்டு
படை போர் புக்கு முழங்கும்
அப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே.
திருப்பல்லாண்டு-1

பழையபுஷ்பங்களையும், திருத்துழாயையும்களைதல், பெருமாளைச் சுற்றி சுத்தம் செய்ய வேண்டும்.

உடுத்துக் களைந்த நின் பீதக ஆடையுடுத்துக்
கலத்ததுண்டு.
தொடுத்த துழாய் மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்.

விடுத்த திசைக் கருமந் திருத்தித்
திருவோணத் திரு விழவில்
படுத்த பைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

திருப்பல்லாண்டு-9

"ஸ்நான ஸிம்மாஸனத்தில் எழுந்தருளி,
திருமஞ்ஜனம் கண்டருளும்படி ப்ராத்தித்தில்."

பெருமாள் எழுந்தருளியிருக்கும் இடம்



| | | |
|---|---|---|
| 1. அர்க்யம் | : | திருக்கைகளை கழுவும் தீர்த்தம் |
| 2. பாத்யம் | : | திருவடிகளை விளக்கும் தீர்த்தம் |
| 3. ஆசமநீயம் | : | ஸ்வீகரித்தல் (திருப்பவளம் சோதித்தல்) தீர்த்தம் |
| 4. ஸ்நானம் | : | திருமஞ்சனம் செய்யும் தீர்த்தம் |
| 5. சுத்தோதகம் | : | பரிசுத்தமான தீர்த்தம் |
| 6. படிகம் | : | அர்க்யம், பாத்ய.,ஆசமநீய ஸ்நானம், சுத்தோகத்தில் உத்தரணியால் எடுக்கப்பட்ட அனைத்து தீர்த்தமும் சேர்க்கக் கூடிய இடம். |
| 7. திருக்காவேரி | : | வாசனை திரவியங்களால் சேர்க்கப்பட்ட புனித தீர்த்தத்தை சேர்த்துவைக்கும் பாத்திரம். |

படத்தில் காட்டியுள்ள எண் 7ல், திருக்காவேரி என்னும் திருமஞ்சன பாத்திரத்தில் தீர்த்தம் நிறைத்து, அதில் பச்சை கற்பூரம், குங்குமப்பூ, ஏலக்காய், சந்தனம் முதலிய பரிமள திரவியங்களையும் திருத்துழாயையும் சேர்த்து, வலக்கையால் திருக்காவேரி பாத்திரத்தின் வாயை மூடிக்கொண்டு **"ஸ்ரீமதே நாராயணாய நம:"** என ஐந்து தரம் அபிமந்திரிக்க வேண்டும்.

இந்த தீர்த்தத்தில் ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து, ஐந்து வட்டில்களிலும் துளித் துளிதீர்த்தத்தை தெளித்து சுத்தம் செய்ய வேண்டும்.

பின்பு திருமஞ்சன தீர்த்தத்தை முறையே படத்தில் காட்டியபடி அமைந்துள்ள அர்க்யம் முதல் சுத்தோதகம் வட்டில் வரையிலும் (1-5) தீர்த்தத்தால் நிறைத்து, ஒவ்வொன்றிலும் திருத்துழாய் சேர்க்க வேண்டும்.

இந்த ஐந்து வட்டில்களையும் வலக்கையினால் மூடி ஐந்து தடவை "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று அபிமந்தரித்து,

அதன் பின்பு பாத்ய (2), ஆசமன(3), ஸ்நானம்(4), சுத்தோதக வட்டில்(5), இவைகளில் உத்தரணியினாலே கொஞ்சம் கொஞ்சம் தீர்த்தம் எடுத்து, ஆர்க்கிய வட்டிலில் (1) சேர்த்துவிட வேண்டும்.

பின்பு அர்க்கிய வட்டிலில்(1) ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து இடக்கையில் பிடித்துக் கொண்டு வலது கையிலுள்ள நடுவிரலுக்கும், ஆள்காட்டி விரலுக்கும் இடையில் திருத்துழாயை இடுக்கிக் கொண்டு, அந்த கையை உத்தரணியின் மேல் வைத்து மூடிக்கொண்டு, இருகைகளையும் முகத்துக்கு நேரே புருவங்களின் இடையே தூக்கிக்கொண்டு,

"ஸ்ரீ அருந்தி ஸரஸீ தோயம்,
கல்யாணி ஸரஸீ பய:
இதந்து விரஜா தோயம்,
காவேரி ஸர்வ தோமுகீ
தாம்ரபர்ணி நதீ தீர்த்தம்
கலசே ஆவாஹனம் யது:"

என்று அபிமந்திரித்து.

அந்த தீர்த்தத்தை, அர்க்கிய(1), பாத்ய(2), ஆசமன(3), ஸ்நாந(4), சுத்தோதகம்(5), திருக்காவேரி(7) ஆகியவற்றில் துளித் துளி தீர்த்தத்தை சேர்த்துவிட்டு, திருவாரதன மூர்த்திகளிலும் துளி சேர்த்துவிட்டு, தன் சிரசில் கொஞ்சம் சேர்த்துக் கொண்டு, மீதியைப் படிகத்தில்(6)ல் சேர்த்து விட வேண்டும்.

"ஸர்வ மங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய
ஸ்ரீமதே நாராயணாய நம:-

என்று அநுசந்தித்துக் கொண்டு, (1) அர்க்கிய வட்டிலில் உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, பகவான் முன் காட்டி "அர்க்கியம் கண்டருள" என்று சொல்லி, அதை 6வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விடவேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்துகொள்ள வேண்டும்.

மறுபடியும் அந்த உத்தரணியை அர்க்கிய வட்டிலான (1)ல் தீர்த்தத்தை எடுத்து, பகவான் முன் காட்டி, "அர்க்கியம் கண்டருள" என்று சொல்லி அதை 6வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

அதன் பின் அந்த உத்தரணியை 5-வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

மறுபடியும் அந்த உத்தரணியை அர்க்கிய வட்டிலான (1)ல் தீர்த்தத்தை எடுத்து, பகவான் முன்காட்டி, "அர்க்கியம் கண்டருள" என்று சொல்லி அதை 6வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொண்டு அர்க்கிய பாத்திரத்தில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும்.

பாத்யம் (2) வட்டிலில் உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து பகவான் முன் காட்டி, "பாத்யம் கண்டருள" என்று சொல்லி அதை 6வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொண்டு, பாத்ய(2)வட்டிலில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும்.

இவ்வாறு பாத்ய வட்டிலில் மூன்று தடவை முன்போலவே செய்ய வேண்டும்.

(3)ஆசமனம் வட்டிலிலுள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து பகவான் முன் காட்டி "ஆசமனம் கண்டருள" என்று சொல்லி அதை 6வது வட்டிலான் படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொண்டு, ஆசமனம் (3) வட்டிலில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும்.

இவ்வாறு ஆசமன வட்டிலில் மூன்று தடவை முன் போலவே செய்ய வேண்டும்.

அர்க்கிய (1) வட்டிலில் ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து திருத்துழாயினால், திருமுத்து (பற்கள்) விளக்கி, திருநா வழித்து, அந்த தீர்த்தத்தையும், திருத்துழாயையும் படிகத்தில் (6) சேர்த்து விட வேண்டும்.

முன் போலவே அர்க்கியம், பாத்யம், ஆசமனங்கள் மூன்றையும், மூன்று தரம் சமர்ப்பித்து, சமர்ப்பித்த தீர்த்தத்தை, படிகத்தில் (6)ல் சேர்த்துவிட வேண்டும்.

பின்பு "ஸ்நானாசனத்தில் எழுந்தருள" என்று பிரார்த்தித்து திருத்துழாய் சமர்பிக்க வேண்டும்.

(4)ஸ்நான வட்டிலிலுள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து பகவான் முன் காட்டி, "திருமஞ்சனம் கண்டருள" என்று சொல்லி அதை 6வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

அதன் பின் அந்த உத்தரணியை 5வது வட்டிலான சுத்தோகத்தில் சுத்தம் செய்து கொண்டு (4)ஸ்நான வட்டிலில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும்.

இவ்வாறு ஸ்நான வட்டிலில் மூன்று தடவை முன் போலவே சமர்ப்பிக்க வேண்டும்.

வெண்ணெய் அளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியுங் கொண்டு
திண்ணென இவ்விரா வுன்னைத்
தேய்த்துக் கிடக்க நானொட்டேன்.
எண்ணெய் புளிப்பழங் கொண்டு
இங்கு எத்தனை போதும்இருந்தேன்.
நண்ணலரிய பிரனே!
நாரணா நீராட வாராய்.

-பெரியாழ்வார் திருமொழி 2-4-1

கார்மலி மேனி நிறத்துக்
கண்ணபிரானை யுகந்து
வார்மலி கொங்கை யசோதை
மஞ்சன மாட்டிய வாற்றைப்
பார்மலி தொல் புதுவைக்கோன்
பட்டர்பிரான் சொன்னபாடல்
சீர்மலி செந்தமிழ் வல்லார்
தீவினை யாதுமிலரே!

-பெரியாழ்வார் திருமொழி-2-4-10

முன் பொலா விராவணன் தன்
முது மதிள் இலங்கை வேவித்து
அன்பினால் அனுமன் வந்து
ஆங்கடியிணை பணிய நின்றார்க்கு
என்பெல்லாம் உருகியுக் கிட்டு
என்னுடை நெஞ்சம் என்னும்
அன்பினால் ஞான நீர் கொண்டு
ஆட்டுவன் அடியனேனே.

-திருக்குறுந்தாண்டகம்-15

மாயமான் மாயச் செற்று
மருதிற நடந்து வையம்
தாயமா பரவை பொங்கத்
தடவரை திரித்து வானோர்க்
கீயுமால் எம்பிரானார்க்கு
என்னுடையச் சொற்கள் என்னும்
தூய மாமலை கொண்டு
சூட்டுவன் தொண்டனேனே.

-திருக்குறுந்தாண்டகம்-16.

சூட்டு நன் மாலைகள் தூயன வேந்தி
விண்ணோர்கள் நன்னீ
ராட்டி அந்தூபம் தரா நிற்கவே
யங்கு, ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய்தொடு வுண்ணப்
போந்தி மிலேற்றுவன் கூன்
கோட்டிடை ஆடினை கூத்து
அடல் ஆயர் தம் கொம்பினுக்கே,

-திருவிருத்தம்-21

காடுகளூடு போய்க் கன்றுகள்
        மேய்த்து மறியோடி. கார்க் கோடல் பூச்
சூடி வருகின்ற தாமோதரா
        கற்றுத் தூளி காணுன் னுடம்பு
பேடை மயிற் சாயல் பின்னை மணாளா
        நீராட்டமைத்து வைத்தேன்
ஆடி அமுது செய். அப்பனும் உண்டிலன்
        உன்னோடு உடனே உண்பான்.

-பெரியாழ்வார் திருமொழி 3-3-3

திண்ணார் வெண் சங்குடையாய்
        திருநாள் திருவோணம் இன்று ஏழுநாள்முன்
பண்ணேர் மொழியாரைக் கூவி முளை யட்டிப்
        பல்லாண்டு கூறுவித்தேன்.
கண்ணாலம் செய்யக் கறியும்
        கலத்த அரிசியும் ஆக்கி வைத்தேன்
கண்ணா! நீ நாளைத் தொட்டுக் கன்றின்பின்
        போகேல். கோலஞ் செய்து இங்கே இரு.

-பெரியாழ்வார் திருமொழி-3-3-9

5 சுத்தோதக வட்டிலிலுள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து பகவான் முன் காட்டி "சுத்தோதக ஸ்நானம் கண்டருள" என்று சொல்லி, அதை 6-வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும். இவ்வாறு மூன்று தடவை சமர்ப்பிக்க வேண்டும்.

திருவொற்றாடையின் ஒரு பக்கத்தைக் கொண்டு திருக்கைகளையும், திருப்பவளத்தையும் துடைத்து, மற்றொரு பக்கத்தால் திருவடிகளைத் துடைக்க வேண்டும். (இதற்கு திருவொற்றாடை சமர்பித்தல் என்று பெயர்)

**"தூபம்" கண்டருளச் செய்தல் (சாம்ராணி)**

பரிவதில் ஈசனைப் பாடி
        விரிவது மேவலுறுவீர்
பிரிவகை யின்றி நன்னீர்தூய்
        புரிவதும் புகை பூவே.

திருவாய் மொழி-1-6-1

## திருவிளக்கு (அ) கற்பூரம் கண்டருளுதல்

அர்க்கிய, பாத்ய, ஆசமன வட்டில்களில் மூன்று முறை எடுத்து கண்டருளி படிகத்தில் சேர்த்தல்.

பின்பு தூபத்தில் காட்டிய உலர்ந்த ஆடையைக் கொண்டு, "திரு வொற்றாடை சமர்ப்பயாமி" என்று சொல்லி, து டைத்து விடுதல்.

"திருப்பரிவட்டம் கண்டருள" என்று சொல்லி உலர்ந்த தூய ஆடைகளை சமர்ப்பித்தல்.

"அலங்காராசனம் கண்டருள" என்று சொல்லி திருத்துழாய் சமர்பித்தல்.

"த்வாதச ஊர்த்துவ புண்டரம் கண்டருள"

"யஞ்ஞோப வீதம் கண்டருள"

"திருவாபரணங்கள் கண்டருள" என்று சொல்லி திருத்துழாய் சமர்ப்பித்தல்.

"சந்தனம் சமர்ப்பயாமி" என்று சொல்லி சந்தனம் காண்பிக்க வேண்டும்.

மந்திர புஷ்பம் ஸ்மர்ப்பயாமி, என்று சொல்லி திருத்துழாயை திருவடிகளில் சமர்ப்பிக்க வேண்டும்.

### "மஹா விஷ்ணு ஸ்லோகம்"

சாந்தாகாரம் புஜக சயநம்,
பத்மநாபம் ஸுரேசம்
விஸ்வாதாரம் ககந ஸத்ருசம்
மேகவர்ணம் சுபாங்கம்
லக்ஷ்மீகாந்தம் கமல நயநம்
யோகி ஹ்ருத் த்யாந கம்யம்
வந்தே விஷ்ணும் பவ பயஹரம்
ஸர்வ லோகைக நாதம்

### மஹா லக்ஷ்மி ஸ்லோகம்

பத்ம ப்ரியே பத்மினி பத்ம ஹஸ்தே
பத்மாலயே பத்மதளாய தாக்ஷி
விச்வ ப்ரியே விஷ்ணு மநோநுகூலே
த்வத் பாத பத்மம் மயி ஸந்நிதஸ்வ

### ஸ்ரீ லக்ஷ்மி ந்ருஸிம்ம ஸ்லோகம்

நாரஸிம்ஹோ, மஹா ஸிம்ஹோ
திவ்யஸிம்ஹோ, மஹா பல:
உக்ரஸிம்ஹோ மஹா தேவ:
உபேந்த்ரச் சாக்நிலோச ந:
நமோஸ்து நாராயண நாரஸிம்ஹ
நமோஸ்து நாராயண வீரஸிம்ஹ
நமோஸ்து நாராயண க்ரூரஸிம்ஹ
நமோஸ்து நாராயண திவ்யஸிம்ஹ.

### ஸ்ரீ ராமர் ஸ்லோகம்

ஸ்ரீராகவம் தசரதாத்மஜ மப்ரமேயம்
ஸீதாபதிம் ரகுகுலாந்வய ரத்ன தீபம்
ஆஜாநு பாஹு மரவிந்த தலாயதாக்ஷம்
ராமம் நிசாசர விநாசகரம் நமாமி
ஸ்ரீ ராம ராம ராமேதி
ரமே ராமே மநோரமே
ஸஹஸ்ர நாம தத்துல்யம்
ராம நாம வராநே.

### ஸ்ரீக்ருஷ்ண ஸ்லோகம்

ஸ்ரீகிருஷ்ண: கமலா நாதோ
வாஸுதேவஸ் ஸநாதந:
வஸுதேவாத்மஜ: புண்யோ
லீலா மாநுஷ விக்ரஹ:

### ஸ்ரீ ஹயக்ரீவ ஸ்லோகம்

ருக் யஜுஸ் ஸாம ரூப:
ஸ்ரீஹயக் ரீவாய நம:

ஜ்நாந ஆநந்த மயம் தேவம்
நிர்மல ஸ்படிக ஆக்ருதம்
ஆதாரம் ஸர்வ வித்யாநாம்
ஹயக்ரீவம் உபாஸ்மஹே.

### ஸ்ரீசக்ரத் தாழ்வார் ஸ்லோகம்

ஸ்புரத் ஸஹஸ்ரார சிகாதி தீவ்ரம்
ஸுதர்சநம் பாஸ்கர கோடி துல்யம்
ஸுரத்விஷாம் ப்ராண விநாசி விஷ்ணோ
சக்ரம் ஸதா அஹம் சரணம் ப்ரபத்யே

### ஸ்ரீ பாஞ்ச ஜந்யாழ்வார் ஸ்லோகம்

விஷ்ணோர் முககோத்தா நில பூரிதஸ்ய
யஸ்ய த்வநிர் தாநவ தர்ப்பஹந்தா
தம் பாஞ்ச ஜந்யம் சசிகோடி ஸுப்ரம்
சங்கம் ஸதா அஹம் சரணம் ப்ரபத்யே.

### ஸ்ரீ பெரிய திருவடி ஸ்லோகம்

தாஸஸ் ஸகா, வாஹநம் ஆஸநம்
த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜம் த்ரயீமய:
உபஸ்திதம் தேந புரோ கருத்மதா த்வத் அங்க்ரி
ஸம்மர்த்த கிணா அங்க சோபிநா.

### ஸ்ரீ சிறிய திருவடி ஸ்லோகம்

ராம தூத மஹா தீர
ருத்ரவீர்ய ஸமுத்பவ
அஞ்ஜநா கர்ப்ப ஸம்பூத
வாயுபுத்ர நமோஸ்துதே.

அஞ்ஜநா நந்தநம் வீரம்
ஜாநகீ சோக நாசநம்
கபீசம் அக்ஷஹந்தாரம்
வந்தே லங்கா பயங்கரம்.

மநோ ஜவம் மாருத துல்ய வேகம்
ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம்

வாதாத்மஜம் வாநர யூதமுக்யம்
ஸ்ரீராம தூதம் சிரஸா நமாமி

உல்லங்க்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம்
யஸ்சோக வஹ்நிம் ஜநகாத் மஜாயா:
ஆதாய தேநைவ ததாஹலங்காம்
நமாமிதம் ப்ராஞ்ஜலிர் ஆஞ்ஜநேயம்.

அஞ்ஜநேயம் அதிபாடலாநநம்
காஞ்சநாத்ரி, கமநீய விக்ரஹம்
பாரிஜாத தருமூல வாஸிநம்
பாவயாமி பவமாந நந்தனம்.

யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருத மஸ்த காஞ்சலிம்
பாஷ்பவாரி பரிபூர்ண லோசனம்
மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம்

பக்கம் 6-ல் திருமந்திரங்கள் அநுசந்தானம் என்ற தலைப்பில் உள்ள அனைத்து மந்திரங்களால் அர்ச்சனை செய்ய வேண்டும்.

## 10. சேவா காலம்

ஸ்ரீசைலேச தொடங்கி, திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை, இவைகளை ஸேவிக்க வேண்டியது.

## 11. திருப்போனகம் கண்டருளல்

தளிகையை கொண்டு வந்து, அதில் திருத் துழாயை சமர்ப்பித்து, அர்க்கிய வட்டிலில் உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து தளிகையை ப்ரோக்ஷித்துவிட வேண்டும். அப்பொழுது "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று சொல்ல வேண்டும்.

வலக்கையினால் பரிசித்து ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே! ஸ்ரீமதே நாராயணாய நம: என்று அநுசந்திக்க வேண்டும்.

அந்த ப்ரசாதத்தை பகவான் முன் காட்டி, "அஸ்மத் ஸ்வாமி ஹஸ்தத்தினால் திருப்போனகம் கண்டருளுக" என்று சொல்லி

நாறு நறும் பொழில் மாலிருஞ்
சோலை நம்பிக்கு, நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்
நேர்ந்து பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த
அக்கார வடிசில் சொன்னேன்,
ஏறு திருவுடையான் இன்று வந்து
இவை கொள்ளுங் கொலோ ?

நாச் 9-6

இன்று வந்து இத்தனையும் அமுது
செய்திடப் பெறில், நான்
ஒன்று நூறு ஆயிரமாக் கொடுத்துப்
பின்னும் ஆளும் செய்வன்,
தென்றல் மணம் கமழும்
திருமாலிஞ் சோலை தன்னுள்
நின்றபிரான், அடியேன் மனத்தே
வந்து நேர்படிலே.

நாச் 9 7

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறை கொண்டு யான் பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாக்
சூடகமே தோள் வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன் பின்னே பால்சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவார
கூடியிருந்து குளிர்ந்து ஏல் ஓர் எம்பாவாய்.

(திருப்பாவை 2-7)

"ஸர்வ மங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்று அநுசந்தித்து, ப்ரசாதம் கண்டருளச் செய்ய வேண்டும்.

சுத்தோக வட்டிலில் உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, "பானீயம் கண்டருள" என்று கூறி, 6-வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

மறுபடியும் அர்க்யம், பாத்யம், ஆசமனங்கள் முன் போலவே சமர்ப்பிக்க வேண்டும். திருவொற்றாடை சமர்ப்பித்தல்.

## 12. திரு நக்ஷத்ரம் ஸேவித்தல்

ஒவ்வொரு நாளிலும் வரும் திருநக்ஷத்ரத்தை ஸேவிக்க வேண்டும். அதற்குதகுந்த வாழி திருநாமங்களையும் ஸேவிக்க வேண்டும். "நித்யாநு சந்தானம்" க்ரந்தத்தில், "திருநக்ஷத்ர நித்ய தனியன்கள்" என்ற தலைப்பில் உள்ளவைகளை பார்த்து அன்றைய திரு நக்ஷத்ரம் ஸேவிக்க வேண்டும்.

## 13. "சாற்று மறை"

கற்பூர ஆர்த்தி காட்டிக் கொண்டு.

சிற்றஞ் சிறுகாலேவந்து, உன்னைச் சேவித்து, உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்,
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்து, நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறை கொள்வான் அன்றுகாண் கோவிந்தா
என்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே யாவோம் உமக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றை நங் காமங்கள் மாற்று ஏல் ஓர் எம்பாவாய்

திருப்பாவை-29

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்,
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்று இறைஞ்சி
அங்கப் பறை கொண்ட வாற்றை, அணி புதுவைப்
பைங் கமலத் தண் டெரியற் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ் மாலை முப்பதுந் தப்பாமே
இங்கிப் பரிசு உரைப்பார் ஈர் இரண்டு மால் வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்.

திருப்பாவை-30

மங்களாசா சநத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்கள் ஆர்வத்தளவு தான் அன்றி, பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வார் என்னும் பெயர்

உ.பர. மாலை-18

ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி
தாழ்வாது மில் குரவர் தாம் வாழி-ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத் தவைகள் தாம் வாழி
செய்ய மறை தன்னுடனே சேர்ந்து.

உ.பர. மாலை-3

மங்களம் பகவான் விஷ்ணு
　　மங்களம் மதுசூதனை
மங்களம் புண்டரிகாக்ஷோ
　　மங்களம் கருடத்வஜ (1)

மங்களம் அஸ்மத் குருப்யோஸ்து
　　மங்களம் அஸ்மத் பரம குருப்யோஸ்து
மங்கள்ம அஸ்மத் ஸர்வ குருப்யோஸ்து
　　நித்ய ஸ்ரீ நித்ய மங்களம்

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
　　பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா உன்
　　சேவடி செவ்வி திருக்காப்பு

அடியோ மோடும் நின்னோடும்
　　பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில்
　　வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும்
　　சுடர் ஆழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும்
　　அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே

ஸர்வ தேச தசா காலேஷ்வ
　　வ்யாஹத பராக்ரமா
ராமாநுஜார்ய திவ்ய ஆஜ்ஞா
　　வர்த்தாம் அபி வர்த்ததாம்.

ராமாநுஜார்ய திவ்ய அஜ்ஞா
　　ப்ரதிவாஸரம் உஜ்ஜ்வலா
திகந்தவ்யாபிநீ பூயாத்
　　ஸா ஹி, லோக ஹிதைஷிணீ

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரீயமநுபத்ரவாம்
　　அநுதினம் ஸம்வர்த்தய
ஸ்ரீமந் ஸ்ரீரங்க ஸ்ரீயமநுபத்ரவாம்
　　அநுதிநம் ஸம்வர்த்தய

நமஸ் ஸ்ரீசைல நாதாய
　　குந்தீ நகர ஜந்மதே
ப்ரஸாத லப்த பரம ப்ராப்ய
　　கைங்கர்ய சாலிநே.

ஸ்ரீ சைலேச தயா பாத்ரம்
　　தீ பக்தி ஆதி குண ஆர்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தே
　　ரம்ய ஜாமாதரம் முநிம்

வாழி திருவாய் மொழிப் பிள்ளை மாதகவால்
　　வாழும் மணவாள மாமுனிவன்-வாழியவன்
மாறன் திருவாய் மொழிப் பொருளை, மாநிலத்தோர்
　　தேறும்படி உரைக்குஞ் சீர்.

செய்ய தாமரைத் தாளிணை வாழியே
　　சேலைவாழி திருநாபி வாழியே.
துய்ய மார்பும் புரிநூலும் வாழியே.
　　சுந்தரத் திருத் தோளிணை வாழியே.
கையும் ஏந்திய முக்கோலும் வாழியே.
　　கருணை பொங்கிய கண்ணிணை வாழியே.
பொய்யிலாத மணவாள மாமுனி
　　புந்தி வாழி புகழ்வாழி வாழியே.

அடியார்கள் வாழ அரங்க நகர் வாழ
சடகோபன் தண் தமிழ் நூல்வாழ, கடல் சூழ்ந்த
மன்னுலகம் வாழ, மணவாள மாமுனியே
இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

அவர் அவர்களுடைய ஆசாரியரின் வாழி திரு நாமங்களை அநுசந்திக்க வேண்டும்.

அதன் பின்

உபசாராபதேசந க்ருதா
　　நஹரஹர்மயா
அபசாரநிமாம் ஸர்வாந்
　　க்ஷமஸ்வ புருஷோத்தம.

ந தர்ம நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ
　　ந பக்தி மாந் த்வத் சரணார விந்தே
அகிஞ்ச்நோ நந்யகதிச் சரண்ய
　　த்வத் பாத மூலம் சரணம் ப்ரபத்யே.

அபாரத ஸஹஸ்ர பாஜநம்
　　பதிதம் பீம பவார்ணவோதரே

அகதிம் சரணா கதம் ஹரே
க்ருபயா கேவலம் ஆத்மஸாத் குரு

என்று சொல்லி அநுசந்தித்துக்கொண்டு தண்டம் ஸமர்ப்பித்துக் கொள்ள வேண்டும்.

## 14. "தீர்த்தம் விநியோகம்"

6-வது வட்டிலான திருப்படிகத்தில் உள்ள தீர்த்தத்தை, எடுத்து, உத்தரணியால் மூன்று தரம் தீர்த்தம் வழங்கும்போதும் அதை உட்கொள்ளும்போதும், கீழ்கண்ட மந்திரத்தைச் சொல்லவேண்டும்.

ஓம் அஸ்மத் குருப்யோ நம:
ஓம் அஸ்மத் பரமகுருப்யோ நம:
ஓம் அஸ்மத் சர்வ குருப்யோ நம:

என்று மூன்று தடவை அநுசந்தித்து உட்கொள்ள வேண்டும்.

திருவடிகளில் அர்ச்சித்த திருதுழாயை எடுத்து வழங்க வேண்டும் அப்பொழுது த்வயத்தை அநுசந்திக்க வேண்டும்.

அதன் பின்பு பெருமாளுக்கு திருவால வட்டம் சமர்ப்பிக்க வேண்டும்.

## 15. "திருக்காப்பு சேர்த்தல்"

"ஸர்வ மங்கள விக்ரஹாய
ஸமஸ்த பரிவாராய
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்று திருத்துழாயை ஸமர்ப்பித்து, பர்யங்காஸனத்தில் எழுந்தருள வேணும்" என்று சொல்லி திருத்துழாயை ஸமர்பிக்க வேண்டும்.

அர்க்யம், பாத்யம், ஆசமநீயம் இவைகளை முறையே ஸமர்ப்பித்து, கர்பூர ஆராத்தியுடன்

உறகல் உறகல் உறகல்
ஒண்சுடர் ஆழியே சங்கே
அறவெறி நாந்தக வாளே
அழகிய சார்ங்கமே தண்டே

இறவு படாமல் இருந்த
எண்மர் உலோக பாலீர்காள்
பறவை அரையா உறகல்
பள்ளி அறை குறிக் கொண்மின்.

அரவத் தமளியினோடும்
அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம் படி வந்து புகுந்து
பரவைத் திரை பலமோதப்
பள்ளி கொள்கின்ற பிரானை
பரவு கின்றான் விட்டுசித்தன்
பட்டினம் காவற் பொருட்டே.

என்று அநுஸந்தித்து தண்டம் ஸமர்ப்பித்து கோயில் ஆழ்வாருக்குத் திருக்காப்பு சேர்க்கவும்.

ஸ்ரீமதே ரம்யஜா மாத்ரு
முநீந்த்ராய மஹாத்மனே !
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத்
நித்ய ஸ்ரீ நித்ய மங்களம் !!